# திரு இசைப்பா - திருப் பல்லாண்டு

(திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதின்மர்)

தொகுத்தவர்

தி. கி. நாராயணசாமி,

2, சீதாராம நகர், கடலூர் N.T.

20 புதுக்காசு

[ ராபபா 3ஆம பககம பாாகக ]

# திரு இசைப்பா

(திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதின்மர்)

ஒளி வளர் விளக்கே! உலப்பு இலா ஒன்றே!
    உணர்வு சூழ் கடந்தது ஓர் உணர்வே!
தெளி வளர் பளிங்கின் திரள் மணிக் குன்றே!
    சித்தத்துள் தித்திக்கும் தேனே!
அளி வளர் உள்ளத்து ஆனந்தக் கனியே!
    அம்பலம் ஆடு அரங்கு ஆக,
வெளி வளர் தெய்வக் கூத்து உகந்தாயைத்
    தொண்டனேன் விளம்புமா விளம்பே!

கோலமே! மேலை வானவர் கோவே!
குணம், குறி, இறந்தது ஓர் குணமே!
காலமே! கங்கை நாயகா! எங்கள்
கால காலா! காம நாசா!
ஆலமே அமுது உண்டு, அம்பலம் செம் பொன்-
கோயில் கொண்டு ஆட வல்லானே!
ஞாலமே! தமியேன் நல் தவத்தாயைத்
தொண்டேன் நனுகுமா நனுகே! 2

நீறு அணி பவளக் குன்றமே! நின்ற
நெற்றிக்கண் உடையது ஓர் நெருப்பே!
வேறு அணி புவன போகமே! யோக
வெள்ளமே! மேரு-வில் வீரா!
ஆறு அணி சடை எம் அற்புதக் கூத்தா!
அம் பொன் செய் அம்பலத்து அரசே!
ஏறு அணி கொடி எம் ஈசனே! உன்னைத்
தொண்டனேன் இசையுமாறு இசையே! 3

கரு வளர் மேகத்து அகடு தோய் மகுடக்
கனக மாளிகை கலந்து எங்கும்
பெரு வளர் முத் தீ நான்மறைத் தொழில் சால்
எழில் மிகு பெரும்பற்றப் புலியூர்த்
திரு வளர் தெய்வப் பதி வதி நிதியம்
திரண்ட சிற்றம்பலக் கூத்தா!
உரு வளர் இன்பச் சிலம்பு ஒலி அலம்பும்
உன் அடிக் கீழது என் உயிரே. 4

ஏர் கொள் கற்பகம் ஒத்து இரு சிலைப் புருவம்
பெருந் தடங் கண்கள் மூன்று உடையோன்
பேர்கள் ஆயிரம் நூறாயிரம் பிதற்றும்
பெற்றியோர் பெரும்பற்றப் புலியூர்,
சீர் கொள் கொக்கு இறகும் கொன்றையும் துன்று
சென்னிச் சிற்றம்பலக் கூத்த!
நீர் கொள் செஞ் சடை வாழ் மதி, புது மத்தம்
நிகழ்ந்த, என் சிந்தையுள் நிறைந்தே. 5

'சே எந்து வெல் கொடியானே!' என்னும்;
'சிவனே! என் சேமத் துணையே!' என்னும்;
மா எந்து சாரல் மகேந்திரத்தில்
வளர் நாயகா, இங்கே வாராய்!' என்னும்;
'பூ எந்தி மூவாயிரவர் தொழ,
புகழ் எந்து மன்று பொலிய நின்ற
கோவே!' என்னும்; 'குணக் குன்றே!' என்னும் —
குலாத் தில்லை அம்பலக் கூத்தனையே. 6

'உற்றாய்!' என்னும்; 'உன்னை அன்றி மற்று ஒன்று
உணரேன்!' என்னும்; 'உணர்வுகள் கலக்கப்
பெற்று, ஆய ஐந்தெழுத்தும் பிதற்றி,
பிணி தீர, வெண் நீறு இடப்பெற்றேன்!' என்னும்;
'சுற்று ஆய சோதி மகேந்திரம் சூழ
மனத்து இருள் வாங்கி, சூழாத நெஞ்சில்
குற்றாய்!' என்னும்; 'குணக் குன்றே!' என்னும்—
குலாத் தில்லை அம்பலக் கூத்தனையே. 7

சிறப்புடை அடியார் தில்லைச்
செம் பொன் அம்பலவற்கு ஆள் ஆம்
உறைப்புடை அடியார் கீழ்க் கீழ்
உறைப்பர் சேவடி நீறு ஆடார்,
இறப்பொடு பிறப்பினுக்கே
இனியர் ஆய், மீண்டும் மீண்டும்
பிறப்பரைக் காணா, கண்; வாய்
பேசாது, அப் பேய்களோடே. ௬

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை,
கரை இலாக் கருணை மா கடலை,
மற்றவர் அறியா மாணிக்க மலையை,
மதிப்பவர் மன மணி விளக்கை,
செற்றவர் புரங்கள் செற்ற எம் சிவனை,
திரு வீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டு கண்டு, உள்ளம்
குளிர, என் கண் குளிர்ந்தனவே. ௭

அக் கனா அனைய செல்வமே சிந்தித்து,
ஐவரோடு அழுந்தி, யான் அவமே
புக்கிடாவண்ணம் காத்து எனை ஆண்ட
புனிதனை, வனிதை பாகனை, எண்
திக்கு எலாம் குலவும் புகழ்த் திரு வீழி
மிழலையான் திருவடி நிழற்கீழ்ப்
புக்கு நிற்பவர்தம் பொன் அடிக் கமலப்
பொடி அணிந்து, அடிமை பூண்டேனே. 10

எண் இல் பல் கோடி சேவடி, முடிகள்!
எண் இல் பல் கோடி திண் தோள்கள்!
எண் இல் பல் கோடி திரு உரு, நாமம்,
ஏர் கொள் முக் கண், முக இயல்பும்!
எண் இல் பல் கோடி எல்லைக்கு அப்பாலாய்
நின்று, ஐஞ்ஞாற்று அந்தணர் ஏத்தும்
எண் இல் பல் கோடி குணத்தர் ஏர் வீழி
இவர் நம்மை ஆள் உடையாரே. 11

மான் ஏர் கலை வளையும் கவர்ந்து, உளம்
கொள்ளைகொள்ள வழக்கு உண்டே?—
தேனே! அமுதே! என் சித்தமே!
சிவலோக நாயகச் செல்வமே!
ஆனே அலம்பு புனல் பொன்னி
அணி ஆவடுதுறை அன்பர்தம்
கோனே! நின் மெய் அடியார் மனக்
கருத்தை முடித்திடும் குன்றமே! 12

பரிந்த செஞ் சுடரோ! பரிதியோ! மின்னோ!
பவளத்தின் குழவியோ! பசும் பொன்
சொரிந்த சிந்துரமோ! தூ மணித் திரளோ!
சுந்தரத்து அரசு இது!' என்ன—
தெரிந்த வைதிகர் வாழ் திரு இடைக்கழியில்
திருக் குரா நீழற் கீழ் நின்ற
வரிந்த வெஞ் சிலைக் கை மைந்தனை அஞ்சொல்
மையல் கொண்டு — ஐயுறும் வகையே. 13

'இவ் அரும் பிறவிப் பௌவநீர் நீந்தும்
ஏழையேற்கு என்னுடன் பிறந்த
ஐவரும் பகையே; ஆர் துணை?' என்றால்,
'அஞ்சல்!' என்று அருள்செய்வான் கோயில்—
கைவரும் பழனம் குழைத்த செஞ் சாலிக்
கடைசியர் களைதரு நீலம்
செய் வரம்பு அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திரு வளர் திருச் சிற்றம்பலமே. 14

கண் பனி அரும்ப, கைகள் மொட்டித்து, 'என்
களைகணே ஓலம்!' என்று ஓலிட்டு,
என்பு எலாம் உருகும் அன்பர்தம் கூட்டத்து
என்னையும் புணர்ப்பவன் கோயில் —
பண் பல தெளி தேன் பாடி நின்று ஆட,
பனி மலர்ச் சோலை சூழ் மொழுப்பில்
செண்பகம் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திரு வளர் திருச் சிற்றம்பலமே. 15

பின்னு செஞ் சடையும் பிறை தவழ் மொழுப்பும்
பெரிய தம் கருணையும் காட்டி,
அன்னை தேன் கலந்து இன் அமுது உகந்தளித்தாங்கு
அருள் புரி பரமர்தம் கோயில் —
புன்னை தேன் சொரியும் பொழில்-அகம் குடைந்து
பொறி வரி வண்டினம் பாடும்
தென்ன தேன் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திரு வளர் திருச் சிற்றம்பலமே. 16

பழையர் ஆம் தொண்டர்க்கு எளியரே, மிண்டர்க்கு
அரியரே, பாவியேன் செய்யும்
பிழை எலாம் பொறுத்து என் பிணி பொறுத்தருளாப்
பிச்சரே, நச்சு-அரா மிளிரும்
குழையராய் வந்து என் குடி முழுது ஆளும்
குழகரே, ஒழுகு நீர்க் கங்கை
அழகரே, ஆகில் — அவர் இடம் களந்தை
அணி திகழ் ஆதித்தேச்சரமே. 17

பவளமே மகுடம்; பவளமே திரு வாய்;
பவளமே திரு உடம்பு; அதனில்
தவளமே களபம்; தவளமே புரிநூல்,
தவளமே முறுவல்; ஆடு அரவம்
துவளுமே; கலையும் துகிலுமே ஒருபால்;
துடி இடை இட மருங்கு ஒருத்தி
அவளுமே ஆகில் — அவர் இடம் களந்தை
அணி திகழ் ஆதித்தேச்சரமே. 18

நீலமே கண்டம்; பவளமே திரு வாய்;
நித்திலம் நிரைத்து இலங்கினவே
போலுமே முறுவல்; நிறைய ஆனந்தம்
பொழியுமே திரு முகம்; ' ஒருவர்
கோலமே அச்சோ அழகிதே!' என்று
குழைவரே கண்டவர்; உண்டது
ஆலமே ஆகில் — அவர் இடம் களந்தை
அணி திகழ் ஆதித்தேச்சரமே. 19

துண்ட வெண் பிறையும் படர் சடை மொழுப்பும்
சுழியமும் சூலமும் நீல
கண்டமும் குழையும் பவளவாய் இதழும்
கண்ணுதல் திலகமும் காட்டி,
கெண்டையும் கயலும் உகளும் நீர்ப் பழனம்
கெழுவு கம்பலை செய் கீழ்க் கோட்டூர்
வண்டு அறை மணி அம்பலத்துள் நின்று ஆடும்
மைந்தன் என் மனம் கலந்தானே. 20

தெள்ளும் நீறவன் நீறு என் உடல் விரும்பும்;
செவி அவன் அறிவுநூல் கேட்கும் ;
மெள்ளவே அவன் பேர் விளம்பும் வாய்; கண்கள்
விமானமே நோக்கி வெவ்வுயிர்க்கும்;
கிள்ளை பூம் பொதும்பில் கொஞ்சி மாம்பொழிற்கே
கெழுவு கம்பலை செய் கீழ்க் கோட்டூர்
வள்ளலே! மணி அம்பலத்துள் நின்று ஆடும்
மைந்தனே! என்னும், என் மனனே. 21

யாது நீ நினைவது? எவரை யாம் உடையது?
எவர்களும் யாவையும் தான் ஆய்,
பாதுகை மழலைச் சிலம்பொடு புகுந்து என்
பனி மலர்க் கண்ணுள் நின்று அகலான்;
கேதகை நிழலைக் குருகு என மருவிக்
கெண்டைகள் வெருவு கீழ்க் கோட்டூர்
மாதவன், மணி அம்பலத்துள் நின்று ஆடும்
மைந்தன், என் மனம் புகுந்தானே. 22

புவன நாயகனே! அக உயிர்க்கு அமுதே!
பூரணா! ஆரணம் பொழியும்
பவள வாய் மணியே! பணி செய்வார்க்கு இரங்கும்
பசுபதி! பன்னகாபரணா!
அவனி ஞாயிறு போன்று அருள்புரிந்து அடியேன்
அகத்திலும், முகத்தலை மூதூர்த்
தவள மா மணிப் பூங் கோயிலும், அமர்ந்தாய்—
தனியனேன் தனிமை நீக்குதற்கே. 23

கல் நெகா உள்ளக் கள்வனேன்; நின்கண்
 கசிவு இலேன்; கண்ணில் நீர் சொரியேன்;
முன் நகா ஒழியேன்; ஆயினும், செழு நீர்
 முகத்தலையகத்து அமர்ந்து உறையும்
பன்னகாபரணா! பவள வாய் மணியே!
 பாவியேன் ஆவியுள் புகுந்தது
என்ன காரணம்? நீ ஏழை நாய்-அடியேற்கு
 எளிமையோ? பெருமை ஆவதுவே. 24

விரியும் நீர் ஆலக் கருமையும், சாந்தின்
 வெண்மையும், செந்நிறத்து ஒளியும்,
கரியும் நீறு ஆடும் கனலும் ஒத்து ஒளிரும்
 கழுத்தில் ஓர் தனி வடம் கட்டி,
முரியுமாறு எல்லாம் முரிந்து, அழகு இயையாய்
 முகத்தலையகத்து அமர்ந்தாயைப்
பிரியுமாறு உளதே?—பேய்களோம் செய்த
 பிழை பொறுத்து ஆண்ட பேர் ஒளியே! 25

என்னை உன் பாத பங்கயம் பணிவித்து,
என்பு எலாம் உருக்க நீ எளிவந்து,
உன்னை என்பால் வைத்து, எங்கும் எஞ்ஞான்றும்
ஒழிவு அற நிறைந்த ஒண் சுடரே!
முன்னை என் பாசம் முழுவதும் அகல
முகத்தலையகத்து அமர்ந்து, எனக்கே
கன்னலும் பாலும் தேனும் ஆர் அமுதும்
கனியும் ஆய், இனியை ஆயினையே. 26

அம்பரா! அனலா! அனிலமே! புவி நீ!
அம்புவே! இந்துவே! இரவி!
உம்பரால் ஒன்றும் அறிவொணா அணு ஆய்
ஒழிவு அற நிறைந்த ஒண் சுடரே!
மொய்ம்பர் ஆய், நலம் சொல் மூதறிவாளர்
முகத்தலையகத்து அமர்ந்து எனக்கே
எம்பிரான் ஆகி, ஆண்ட நீ மீண்டே
எந்தையும் தாயும் ஆயினையே. 27

நையாத மனத்தினனை நைவிப்பான் இத் தெருவே,
ஐயா! நீ உலாப் போந்த அன்று முதல் இன்று வரை,
கை ஆரத் தொழுது, அருவி கண் ஆரச் சொரிந்தாலும்,
செய்யாயோ அருள்?—கோடைத் திரைலோக்கிய சுந்தரனே! 28

நீ வாராது ஒழிந்தாலும், நின்பாலே விழுந்து, ஏழை
கோவாத மணி முத்தம் குவளை மலர் சொரிந்தனவால்;
ஆ வா! என்று அருள்புரியாய்—அமரர் கணம் தொழுது ஏத்தும்
தேவா! தென் பொழில் கோடைத் திரைலோக்கிய சுந்தரனே!

முழுவதும் நீ ஆயினும், இம் மொய்குழலாள், மெய்ம்முழுதும்
பழுது எனவே நினைந்து, ஓராள்; பயில்வதும் நின் ஒரு நாமம்;
அழுவதும் நின் திறம் நினைந்தே; அது அன்றோ பெறும் பேறு?—
செழு மதில் சூழ் பொழில் கோடைத் திரைலோக்கிய சுந்தரனே! 30

தன் சோதி எழு மேனித் தபனியப் பூஞ் சாய்க்காட்டாய்!—
உன் சோதி எழில் காண்பான் ஒலிடவும், உருக் காட்டாய்;
துஞ்சா கண்; இவளுடைய துயர் தீரும் ஆறு உரையாய்'—
செஞ் சாலி வயல் கோடைத் திரைலோக்கிய சுந்தரனே' 31

உள் நெகிழ்ந்து, உடலம் நெக்கு, 'முக்கண்ணா
ஓலம்!' என்று ஓலமிட்டு, ஒருநாள்,
மண்ணின் நின்று அலறேன்; வழி மொழி மாலை
மழலை அம் சிலம்பு அடி முடி மேல்
பண்ணின் நின்று உருகேன்; பணி செயேன்; எனினும்,
பாவியேன் ஆவியுள் புகுந்து, என்
கண்ணின் நின்று அகலான் என்கொலோ—
கங்கை கொண்ட சோளேச்சரத்தானே! 32

அற்புதத் தெய்வம் இதனின் மற்று உண்டே—
அன்பொடு தன்னை அஞ்செழுத்தின்
சொற்பதத்துள் வைத்து உள்ளம் அள்ளூறும்
தொண்டருக்கு எண் திசைக் கனகம்
பல் பதக் குவையும் பைம் பொன் மாளிகையும்
பவள வாயவர் பணை முலையும்
கற்பகப் பொழிலும் முழுதும் ஆம்—
கங்கை கொண்ட சோளேச்சரத்தானே! 33

ஐய பொட்டு இட்ட அழகு வாள் நுதலும்,
அழகிய விழியும், வெண் நீறும்,
சைவம் விட்டிட்ட சடைகளும், சடைமேல்
தரங்கமும், சதங்கையும், சிலம்பும்
மொய் கொள் எண் திக்கும் கண்ட நின் தொண்டர்
முகம் மலர்ந்து, இரு கண் நீர் அரும்பக்
கைகள் மொட்டிக்கும், என்கொலோ—
கங்கை கொண்ட சோளேச்சரத்தானே! 34

அண்டம் ஓர் அணு ஆம் பெருமை கொண்டு, அணு ஓர்
அண்டம் ஆம் சிறுமை கொண்டு, அடியேன்
உண்ட ஊண் உனக்கு ஆம் வகை எனது உள்ளம்
உள் கலந்து எழு பரஞ் சோதி!
கொண்ட நாண் பாம்பு ஆம் பெரு வரை வில்லில்
குறுகலர் புரங்கள் மூன்று எரித்த
கண்டனே! நீல கண்டனே!—
கங்கை கொண்ட சோளேச்சரத்தானே! 35

தத்தை அங்கனையார்-தங்கள்மேல் வைத்த
தயாவை நூறாயிரம் கூறு இட்டு,
அத்தில் அங்கு ஒரு கூறு உன்கண் வைத்தவருக்கு
அமர்-உலகு அளிக்கும் நின் பெருமை—
பித்தன் என்று ஒருகால் பேசுவரேனும்,
பிழைத்தவை பொறுத்து அருள் செய்யும்
கைத்தலம் அடியேன் சென்னிமேல் வைத்த
கங்கை கொண்ட சோளேச்சரத்தானே! 36

பண்ணிய தழல் காய் பால் அளாம் நீர்போல்
பாவம் முன் பறைந்து, பால் அனைய
புண்ணியம் பின் சென்று, அறிவினுக்கு அறியப்
புகுந்தது ஓர் யோகினின் பொலிந்து
நுண்ணியை எனினும், நம்ப! நின் பெருமை
நுன்னிடை ஒடுங்க நீ வந்து என்
கண்ணினுள் மணியின் கலந்தனை—
கங்கை கொண்ட சோளேச்சரத்தானே! 37

கடு வினைப் பாசக் கடல் கடந்து, ஐவர்
கள்ளரை மெள்ளவே துரந்து, உன்
அடி இணை இரண்டும் அடையுமாறு அடைந்தேன்;
அருள் செய்வாய், அருள் செயாது ஒழிவாய்!—
நெடு நிலை மாடத்து இரவு இருள் கிழிக்க
நிலை விளக்கு அலகு இல் சாலேகம்
புடை கிடந்து இலங்கும் ஆவண வீதிப்
பூவணம் கோயில் கொண்டாயே! 38

செம் மனக் கிழவோர், 'அன்பு தா' என்று, உன்
சேவடி பார்த்திருந்து அலச,
எம் மனம் குடிகொண்டிருப்பதற்கு யான் ஆர்?
என்னுடை அடிமைதான் யாதே?—
அம் மனம் குளிர் நாள் பலிக்கு எழுந்தருள
அரிவையர் அவிழ் குழல் சுரும்பு
பொம்மென முரலும் ஆவண வீதிப்
பூவணம் கோயில் கொண்டாயே! 39

பாந்தள், பூண் ஆரம்; பரிகலம் கபாலம்;
பட்டவர்த்தனம் எருது; அன்பர்
வார்ந்த கண் அருவி மஞ்சன சாலை;
மலைமகள் மகிழ் பெருந் தேவி;
சாந்தமும் திருநீறு; அரு மறை கீதம்;
சடை முடி; சாட்டியக் குடியார்
வந்து எழில் இதயம் கோயில் மாளிகை—
ஏழ் இருக்கையுள் இருந்த ஈசனுக்கே. 40

அனலமே! புனலே! அனிலமே! புவனி!'
அம்பரா! அம்பரத்து அளிக்கும்
கனகமே! வெள்ளிக் குன்றமே! என்தன்
களைகணே! களைகண் மற்று இல்லாத்
தனியனேன் உள்ளம் கோயில் கொண்டருளும்
சைவனே!—சாட்டியக் குடியார்க்கு
இனிய தீம் கனி ஆய், ஒழிவு அற நிறைந்து,
ஏழ் இருக்கையில் இருந்தவாறு இயம்பே! 41

செங்கணா போற்றி! திசைமுகா போற்றி!
சிவபுர நகருள் வீற்றிருந்த
அங்கணா போற்றி! அமரனே போற்றி!
அமரர்கள் தலைவனே போற்றி!
தங்கள் நான்மறை நூல் சகலமுங் கற்றோர்
சாட்டியக் குடி இருந்தருளும்
எங்கள் நாயகனே போற்றி! ஏழ் இருக்கை
இறைவனே போற்றியே போற்றி! 42

சித்தனே அருளாய்! செங்கணா அருளாய்!
சிவபுர நகருள் வீற்றிருந்த
அத்தனே அருளாய்! அமரனே அருளாய்!
அமரர்கள் அதிபனே அருளாய்!
தத்து நீர்ப் படுகர்த் தண்டலைச் சூழல்
சாட்டியக் குடியுள் ஏழ் இருக்கை
முத்தனே அருளாய்! முதல்வனே அருளாய்!—
முன் அவா, துயர் கெடுத்து எனக்கே. 43

நெற்றியில் கண் என் கண்ணின் நின்று அகலா;
நெஞ்சினில், அம் சிலம்பு அலைக்கும்
பொன் திருவடி என் குடி முழுது ஆளப்
புகுந்தன; போந்தன இல்லை;
மற்று எனக்கு உறவு என்?—மறி திரை வடவாற்று
இடு புனல் மதகில் வாழ் முதலை
எற்று நீர்க் கிடங்கில் இஞ்சி சூழ் தஞ்சை
இராசராசேச்சரத்து இவர்க்கே. 44

பல் நெடுங் காலம் பணி செய்து பழையோர்-
தாம் பலர் ஏம்பலித்திருக்க,
என் நெடுங் கோயில் நெஞ்சு வீற்றிருந்த
எளிமையை என்றும் நான் மறக்கேன்—
மின் நெடும் புருவத்து இள மயில் அனையார்,
விலங்கல் செய் நாடக சாலை,
இன் நடம் பயிலும் இஞ்சி சூழ் தஞ்சை
இராசராசேச்சரத்து இவர்க்கே. 45

பந்தமும் பிரிவும் தெரி பொருட் பனுவல்
படி வழிச் சென்று சென்று எறி,
சிந்தையும் தானும் கலந்தது ஓர் கலவி
தெரியினும், தெரிவுறு வண்ணம்
எந்தையும் தாயும் யானும் என்று இங்ஙன்
எண் இல் பல் ஊழிகள் உடனாய்
வந்து அணுகாது நுணுகி உள் கலந்தோன்
மருவு இடம் திரு இடைமருதே. 46

'கலங்கலப் பொய்கைப் புனல் தெளிவிடத்தக்
கலந்த மண் இடைக் கிடந்தாங்கு,
நலம் கலந்து அடியேன் சிந்தையுள் புகுந்த
நம்பனே! வம்பனேனுடைய
புலம் கலந்தவனே!' என்று நின்று உருகிப்
புலம்புவார் அவம் புகார்; அருவி
மலங்கல் அம் கண்ணின் கண்மணி அனையான்
மருவு இடம் திரு இடைமருதே. 47

பத்தியாய் உணர்வோர் அருளை வாய் மடுத்துப்
பருகுதோறு அமுதம் ஒத்து அவர்க்கே
தித்தியா இருக்கும் — தேவர்காள்! — இவர்தம்
திரு உரு இருந்தவா பாரீர்!
சத்தி ஆய், சிவம் ஆய், உலகு எலாம் படைத்த
தனி முழு முதலும் ஆய், அதற்கு ஓர்
வித்தும் ஆய், ஆரூர் ஆதி ஆய், வீதி
விடங்கர் ஆய், நடம் குலாவினரே. 48

'களி வான் உலகின் கங்கை நங்கை காதலனே அருள்!' என்று,
ஒளி யால் முன்னே வரம் கிடக்க, உன் அடியார்க்கு அருளும்
தெளி ஆர் அமுதே! தில்லை மல்கு செம்பொனின் அம்பலத்துள்
ஒளி வான் சுடரே! உன்னை நாயேன் உறுவதும் என்று கொலோ?

துச்சான செய்திடினும், பொறுப்பர் அன்றே, ஆள் உகப்பார்;
கைச்சாலும், சிறு கதலி, இலை வேம்பும் கறி கொள்வார்;
எச் சார்வும் இல்லாமை நீ அறிந்தும், எனது பணி
நச்சாய்காண் — திருத் தில்லை நடம் பயிலும் நம்பானே! 50

நின்று, நினைந்து, இருந்து, கிடந்து, எழுந்து, தொழும் தொழும்பனேன்
ஒன்றி ஒரு கால் நினையாது இருந்தாலும் இருக்க ஒட்டாய்;
கன்று பிரி கற்றாப்போல் கதறுவித்தி; வரவு நில்லாய்;
நன்று இதுவோ? — திருத் தில்லை நடம் பயிலும் நம்பானே! 51

வாடா வாய், நாப் பிதற்றி, உனை நினைந்து நெஞ்சு உருகி,
வீடு ஆம், செய் குற்றேவல்; எற்றே மற்று? இது பொய்யில்
கூடாமே கைவந்து குறுகுமாறு யான் உன்னை
நாடாயால் — திருத் தில்லை நடம் பயிலும் நம்பானே! 52

மையல் மாது ஒரு கூறன், மால் விடை ஏறி,
மான் மறி ஏந்திய தடங்-
கையன், கார் புரையும் கறைக் கண்டன்,
கனல் மழுவான்,
ஐயன், ஆர் அழல் ஆடுவான், அணி நீர் வயல்
தில்லை அம்பலத்தான்,
செய்ய பாதம் வந்து, என் சிந்தையுள்
இடம் கொண்டதுவே! 53

தேய்ந்து, மெய் வெளுத்து, அகம் வளைந்து, அரவினை
அஞ்சித் தான் இருந்தேயும்,
காய்ந்து வந்து வந்து என்தனை வலிசெய்து
கதிர் நிலா எரி தூவும் —
ஆய்ந்த நான்மறை அந்தணர் தில்லையுள்
அம்பலத்து அரன் ஆடல்
வாய்ந்த மா மலர்ப் பாதங்கள் காண்பது ஓர்
மனத்தினை உடையேற்கே! 54

உடையும் பாய் புலித் தோலும் நல் அரவமும்;
உண்பதும் பலி தேர்ந்து;
விடையது ஊர்வது; மேவு இடம் கொடு வரை;
ஆகிலும், என் நெஞ்சம்,
மடை கொள் வாளைகள் குதி கொளும் வயல் தில்லை
அம்பலத்து அனல் ஆடும்
உடைய கோவினை அன்றி, மற்று ஆரையும்
உள்ளுவது அறியேனே. 55

அறிவும், மிக்க நல் நாணமும், நிறைமையும்,
ஆசையும், இங்கு உள்ள
உறவும், பெற்ற நல் தாயொடு தந்தையும்,
உடன் பிறந்தவரோடும்
பிரிய விட்டு, உனை அடைந்தனன்: என்று கொள்—
பெரும்பற்றப் புலியூரில்
மறைகள் நான்கும் கொண்டு அந்தணர் ஏத்த, நல்
மா நடம் மகிழ்வோனே! 56

அன்ன நடையார் அமுத மொழியார் அவர்கள் பயில் தில்லை,
தென்னன் தமிழும் இசையும் கலந்த சிற்றம்பலம் தன்னுள்,
பொன்னும் மணிபம் நிரந்த தலத்து, புலித் தோல் பியற்கு இட்டு,
மின்னின் இடையாள் உமையாள் காண, விகிர்தன் ஆடுமே. 57

இறைவனை, என் கதியை, என்னுளே உயிர்ப்பு ஆகி நின்ற
மறைவனை, மண்ணும் விண்ணும் மலி வான் சுடராய் மலிந்த
சிறை அணி வண்டு அறையும் தில்லை மா நகர்ச் சிற்றம்பலம்
நிறை அணி ஆம் இறையை—நினைத்தேன்; இனிப் போக்குவனே? 58

எழுந்தருளாய், எங்கள் வீதியூடே—
ஏதம் இல் முனிவரோடு எழுந்த ஞானக்
கொழுந்தது ஆகிய கூத்தனே'—நின்
குழை அணி காதினில் மாத்திரையும்
செழுந் தட மலர் புரை கண்கள் மூன்றும்
செங் கனி வாயும் என் சிந்தை வௌவ,
அழுந்தும் என் ஆர் உயிர்க்கு என் செய்கேனோ?—
அரும் புனல் அலமரும் சடைபிரானே' 59

அரும் புனல் அலமரும் சடைபிரானை அமரர்கள்
அடி பணிந்து அரற்ற, அந்நாள்,
பெரும் புரம் எரிசெய்த சிலையின் வார்த்தை
பேசவும் நையும், என் பேதை நெஞ்சம்,—
கருந் தட மலர் புரை கண்ட! —என்று ஆர்
காரிகையார் முன்பு என் பெண்மை தோற்றேன்,
திருந்திய மலர் அடி நசையினாலே —
தில்லை அம்பலத்து எம்மான் தேவ தேவே' 60

தில்லை அம்பலத்து எங்கள் தேவ தேவைத்
தேறிய அந்தணர் சிந்தை செய்யும்
எல்லையது ஆகிய எழில் கொள் சோதி!
என் உயிர் காவல் கொண்டிருந்த எந்தாய்!
பல்லை ஆர் பசுந் தலை ஓடு இடறிப்
பாத மென் மலர்-அடி நோவ, நீ போய்,
அல்லினில் அரு நடம் ஆடில், எங்கள்
ஆர் உயிர் காவல் இங்கு அரிதுதானே. 61

ஏ இவரே வானவர்க்கும் வானவரே என்பாரால்;
தாய் இவரே எல்லார்க்கும்; தந்தையும் ஆம் என்பாரால்;
தேய் மதியம் சூடிய தில்லைச் சிற்றம்பலவர்
வாயினை கேட்டு அறிவார் வையகத்தார் ஆவாரே. 62

அன்று அருக்கனைப் பல் இறுத்து, ஆனையைக்
கொன்று, காலனைக் கோள் இழைத்தீர்' எனும்—
தென்றல் ஆர் பொழில் தில்லையுளீர்!—இவள்
ஒன்றும் ஆகிலள், உம்பொருட்டே. 63

# திருப் பல்லாண்டு

(சேந்தனர்)

மன்னுக, தில்லை! வளர்க, நம் பத்தர்கள்!
வஞ்சகர் போய் அகல,
பொன்னின் செய் மண்டபத்துள்ளே புகுந்து
புவனி எல்லாம் விளங்க,
அன்ன நடை மடவாள் உமை கோன்
அடியோமுக்கு அருள் புரிந்து,
பின்னைப் பிறவி அறுக்க நெறி தந்த பித்தற்குப்
பல்லாண்டு கூறுதுமே. 64

மிண்டு மனத்தவர் போமின்கள்! மெய் அடியார்கள்
விரைந்து வம்மின்!
கொண்டும் கொடுத்தும் குடிகுடி ஈசற்கு ஆட் -
செய்மின், குழாம் புகுந்து!

அண்டம் கடந்த பொருள், அளவு இல்லது ஓர்
ஆனந்த வெள்ளப் பொருள்,
பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருள், என்றே
பல்லாண்டு கூறுதுமே. 65

சொல் ஆண்ட சுருதிப் பொருள் சோதித்த
தூய் மனத் தொண்டருள்ளீர்!
சில் ஆண்டில் சிதையும் சில தேவர்
சிறு நெறி சேராமே,
வில் ஆண்ட கனகத் திரள் மேரு
விடங்கன், விடைப் பாகன்,
பல்லாண்டு என்னும் பதம் கடந்தானுக்கே
பல்லாண்டு கூறுதுமே. 66

சீரும் திருவும் பொலியச் சிவலோக
நாயகன் சேவடிக் கீழ்
ஆரும் பெறாத அறிவு பெற்றேன்; பெற்றது
ஆர் பெறுவார் உலகில்?

ஊரும் உலகும் கழற உழறி
உமை மணவாளனுக்கு ஆள்
பாரும் விசும்பும் அறியும் பரிசு
பல்லாண்டு கூறுதுமே. 67

குழல் ஒலி, யாழ் ஒலி, கூத்து ஒலி, ஏத்து ஒலி,
எங்கும் குழாம் பெருகி,
விழவு ஒலி விண் அளவும் சென்று விம்மி
மிகு திரு ஆரூரில்
மழ விடையாற்கு வழிவழி ஆள் ஆய்
மணம் செய் குடிப் பிறந்த
பழ அடியாரொடும் கூடி, எம்மானுக்கே
பல்லாண்டு கூறுதுமே. 68



சாது அச்சுக்கூடம், மயிலாப்பூர், சென்னை-4

